

ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்

# குறள் முழக்கம்



உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகம் வெளியிடும் இலவச இணையத் திங்களிதழ்

குறள்முழக்கம் தி.வ.ஆ.2054 வைகாசி-27 10/7/2023 இலவச இணையத் திங்களிதழ்



## குறள்நெறியே வாழ்வுநெறியென வாழ்ந்து காட்டிய

அறநெறிச் செம்மல் இனியவன் நினைவைப் போற்றுவோம்



வீதிவெறிச்சோடிக்கிடக்கிறது
இலக்கியம் புறப்பட்டுப்போய்விட்டது
தமிழ் மது மடிந்துவிட்டது
அந்தகமாகித் திசை இருண்டது.
இளைஞர்களைச்
சுமந்து வளர்த்த தோள்
இளைப்பாற முடிவெடுத்துவிட்டது.
இனியவன்
இனி இல்லை என்னும் துயர் கடக்கத்
தமிழ்த்தாய்க்கே
இன்னும் நாள்கள் பலவாகும்.
நாம் எப்படிக் கடப்போம்.?
களங்கமற்ற ஓர் இலக்கியவாதிக்கு,
கருணையுள்ள ஒரு தோழமைக்கு,
காப்பு அரணான ஒருகுடும்பத்தலைவனுக்கு,
வாணிக விதையில்லாத
ஒரு திராட்சைக்குலைக்கு,
நாம் அறிந்த பெயர்
இலக்கியவீதி இனியவன்.
----------------------ஈரோடு தமிழன்பன்
[முகநூல் பதிவு]

பாட்டுப் பறவைகளின் வேடந்தாங்கல்!
எழுத்தாளர்களின் இயக்கத்திற்கு வழிகாட்டிய
**இலக்கிய வீதி!**

## அன்றைய வாழ்த்து இன்றைய வரலாறு

இலக்கியவீதி இனியவன் அவர்களின் பவழவிழா அண்ணாநகர்த் தமிழ்ச்சங்கத்தால் 16/4/2017-அன்று மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது

அண்ணாநகர்த் தமிழ்ச் சங்கம்
சென்னை - 102.

**இலக்கியவீதி இனியவன்**
பவழவிழா அழைப்பிதழ்

அன்புடையீர், வணக்கம்.
நிகழும் திருவள்ளுவர் ஆண்டு 2048 சித்திரைத்திங்கள்
மூன்றாம் நாள் (16/04/2017) ஞாயிற்றுக்கிழமை
காலை 10.00 மணிக்கு சென்னை அண்ணாநகர்
கந்தசாமி நாயுடு கல்லூரியில், மூத்த எழுத்தாளரும்
சென்னைக் கம்பன் கழகச் செயலாளருமான

**இலக்கியவீதி இனியவன்**
அவர்களின் எழுபத்தைந்தாம் அகவை நிறைவுப் பவழவிழா

**புலவர்மணி த.இராமலிங்கம்**
அவர்களின் தலைமையில்

**சிலம்பொலி செல்லப்பனார்**
அவர்களின் முன்னிலையில் நிகழ்வுறும்.

சான்றோர் பலர் பாராட்டுரை வழங்குகிறார்கள். தாங்களும்
கலந்துகொண்டு சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்.

| அரிமா.துரை.சுந்தரராசுலு | தி.ரங்கராசன் | புலவர் த.இராமலிங்கம் |
|---|---|---|
| செயலாளர் | பொருளாளர் | தலைவர் |

**நிகழ்ச்சி நிரல்**

வரவேற்புரை
அரிமா. துரை.சுந்தரராசுலு அவர்கள்
(செயலாளர்,அண்ணா நகர்த் தமிழ்ச்சங்கம்)

தலைமை
தமிழ்ப்பணிச்செம்மல்
புலவர்மணி த.இராமலிங்கம் அவர்கள்
(தலைவர், அண்ணாநகர்த் தமிழ்ச் சங்கம்)

சிறப்புரை
முனைவர் சிலம்பொலி செல்லப்பனார்

பாராட்டுரை
புதுகை மு.தருமராசன் அவர்கள்
(ஆசிரியர், புதுகைத்தென்றல்)
பேராசிரியர் மறைமலை இலக்குவனார்

நன்றி நவிலல்
தி.ரங்கராசன் அவர்கள்
(சங்கப் பொருளாளர்)

வாழுங்காலத்திலேயே ஆன்றவிந்தடங்கிய சான்றோர்களைக் கொண்டாடிமகிழ்வது அண்ணாநகர்த் தமிழ்ச்சங்கத்தின் தனிச்சிறப்பு.சங்கத் தலைவர் புலவர்மணி த.இராமலிங்கம் அவர்களும் சங்கச் செயலர் அரிமா துரை.சுந்தரராசு அவர்களும் இதனைத் தம் வாழ்வுக் குறிக்கோளாகவே கொண்டு செயற்படுகின்றனர்.பல்துறைகளிலும் முத்திரை பதித்த வித்தகர்களும் நாட்டுக்கும் மொழிக்கும் உழைத்துவரும் மூத்த அருந்திறலாளர் பலரும் இதன் உறுப்பினர்களாவர்.அனைத்து நற்பணிகளுக்கும் உற்றுழி உதவியும் உறுபொருள் வழங்கியும் பிற்றைநிலை முனியாது வெற்றி தேடித் தரும் பெற்றியராகவே உறுப்பினர்கள் அனைவரும் அமைந்திருப்பது சங்கத்தின் மற்றொரு சிறப்பாகும்.

இனியவன் அவர்கள்பால் என்றும் பேரன்பு காட்டிச் சீராட்டிய சிலம்பொலியார் அன்பும் நேயமும் இழைந்த வாழ்த்துரை வழங்கினசர்கள்.இனியவனார்க்கு விழா எனில் ஆளுயர மாலையுடன் வந்து அவர் தோளில் சூட்டி அழகுபார்க்கும் கவிஞர் அரிமா இளவரச அமிழ்தன் அன்று அம்மாவுக்கும் சேர்த்து இரு மாலைகள் வாங்கிவந்து முத்துவிழாக் காணும் இணையரை மணமக்களாக்கிச் சிலம்பொலியாரைப் ‘புரோகிதம்’ செய்யவைத்தார்.புலவர்மணி த.இராமலிங்கம் அவர்கள் தம் தலைமையுரையில் இனியவனாரின்

தொண்டுகளைத் தொடுத்துரைத்தார்.புதுகைத் தென்றல் தருமராசன் அவர்களும் சங்கச் செயலர் துரை.சுந்தரராசு அவர்களும் வாஞ்சை மிக்க வாழ்த்துரை வழங்கினர்.

மறைமலை இலக்குவனார் எப்போதும் கணியச்சுச் செய்து வந்து படிப்பதை வழக்கமாகக் கொண்டவர் என்பதால் அவரது வாழ்த்துரை இங்கே-உங்கள் பார்வைக்கு-அச்சேறியுள்ளது. இதோ!

இலக்கியவீதி இனியவன் -75



இலக்கியவீதி இனியவன் கசலட்சுமி இனியவன்

வாழ்விணையர்க்குப் பவழவிழா

பாண்டியன் சங்கத்தில் கபிலர் தலைமையில்

ஓரி பாராட்ட நடக்கிறது.

சுந்தரராசப் பாண்டியன் சங்கத்தில்

இராமலிங்கக் கபிலர் தலைமையில்

சொல் வில் ஓரியாகிய சிலம்பொலி செல்லப்பனார் பாராட்ட

நடக்கிறது.




பொதிகைத்தென்றல் சூழும் அகத்தியருக்கு இணையாகப்

புதுகைத்தென்றல் ஆளும் தருமராசன் வந்துள்ளார்.

அண்ணாநகர்ச் சான்றோர்கள், புலவர்கள், பாவலர்கள்

அணியாய் அணி அணியாய் அமர்ந்துள்ளீர்கள்.

செயகாந்தனும் நா. பா. வும்

தாரா பாரதியும் பல்லவனும்

சமுத்திரமும் வலம்புரி சானும் வந்துள்ளார்கள்.

தக்காரைக் கண்டறிந்து வாழ்த்துவதையே

வாழ்நெறியாகக் கொண்டவரை

வாழ்த்த வந்தவர்களே வாழ்க.

விழா எடுத்துப் போற்றுவதையே கடமையாய்க் கருதுபவரை

விழா எடுத்துப் போற்றும்

அண்ணாநகர்த் தமிழ்ச்சங்கத்தாருக்கு

என் அகங்கனிந்த நன்றியும் வணக்கமும்.



வீராசாமி-பங்கசம் வாழ்விணையர் பெற்ற

பேறாக வந்த பிள்ளை அவர்களால்

சீராட்டி வளர்க்கப்பட்ட செல்வமகன்

ஏரோட்டும் வேளாண் மரபின் வழிநின்று

பயிர்வளம் செழிக்கப் பாடுபடுவான் என்று

எதிர்பார்த்திருந்த இலக்குமிபதி

இலக்கியத்

தேரோட்டும் எழுத்துப்பணியில்



பாராட்டத்தக்க படைப்புகள் படைத்தார்;

சீராட்டப்பட்டார்; சிறப்பு வாய்ந்தவர்களால்!

பள்ளிப்படிப்புப் படிக்கும்போதே

பெரும்புள்ளியாய் விட்டார்!

உண்மை!புகழ்ச்சியில்லை!

ஒன்பதாம் வகுப்புப் படிக்கும்போதே

**மாணவர் குரல்** நடத்திய சிறுகதைப் போட்டியில்

முதல் பரிசு வென்றார்! ஒப்பிலாப் பெருமையுற்றார்!

இதழ்களில் தொடர்ந்து எழுதிட வலிமை பெற்றார்!

**இனியவன்** என்னும் புனைபெயர் ஏற்றார்!

இதழ்களெல்லாம் அவர் கதைகளைத் தாங்கிவந்தன.




கண்ணன் நடத்திய தொடர்கதைப் போட்டியில்

பொன்மனம்என்னும் தலைப்பில் கதை வழங்கினார்!

முதல் பரிசு பெற்றபோது அவர்

பள்ளியிறுதி வகுப்புப் பயிலும் மாணவர்!

அந்தத் தொடர்கதை புத்தகமாகவும் வெளிவந்தது!

பதினோராம் வகுப்புப் படிக்கும் போதே

புதினம் படைத்த வரலாற்றுச் சிறப்பை

இலக்கிய உலகம் என்றுமே போற்றும்!

நெஞ்சில் நிறுத்துங்கள்!

பதினோராம் வகுப்புப் படிக்கும் போதே



பதினைந்து விழுக்காடு உரிமத்தொகைவாங்கிய

சாதனையாளர் இனியவன் ஒருவரே!

பள்ளிப்படிப்பு நிறைவுபெற்றதும்

மேற்படிப்புப் படிப்பதற்காக ஆர்வம் காட்டவில்லை!

இவர் மேலும் படிக்கவிரும்பவில்லை!

இவர் கதைகளை மேலும் மேலும் படிக்க

வாசகர் விழைந்தனர்!

ஆமாம்! குமுதம் ஆனந்தவிகடன் வாசகர்கள்

ஆர்வத்துடன் படிக்கவிரும்பிய

அற்புதப் படைப்புகளைப் படைத்துவழங்கினார்!

அந்தக் காலத்தில் பத்திரிகைகளெல்லாம்

முற்றுகையிடப்பட்ட கோட்டைகளாகவே விளங்கின;

அங்கே அனுப்பப்படுவனவெல்லாம்

திருப்பி அனுப்பப்படுவதே வாடிக்கை.

ஒரு கதை வெளியாவதற்குள்

அஞ்சல் ஊழியர் ஒன்பதுமுறை வந்து செல்வார்!

எழுத்தாளராக விழைவோர் இதழ்களுக்கு

அனுப்பிய அஞ்சல் திருப்பி அனுப்பப்பட்டு

அலுப்புப் பாராமல் கதைகளை அனுப்பி அனுப்பி

அதற்குப் பிறகே கதைகள் வெளிவரும் அந்தக்காலத்தில்

இவர் அனுப்பிய முதல் கதையையே;

அறிமுக எழுத்தாளர்கதையாகக் குமுதம் வெளியிட்டது!

எடுத்த எடுப்பிலேயே ஆனந்தவிகடனில்

முத்திரைக்கதை படைத்த முன்னவர் இவரே!

நா. பா. அவர்கள் வியந்து பாராட்டிய

இவருடைய சிறுகதையை

கல்கி இதழ் வரவேற்று வெளியிட்டது!

எழுத்துவேந்தர் இனியவன் அவர்கள் ஆட்சி

கடல்கடந்தும் பரந்துவிரிந்தது!

இலங்கையில் அமுதம்இதழும்

தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களின் பாராட்டுடனே

சிங்கப்பூர் தமிழ்முரசு இதழும்





புலம்பெயர் தமிழர்களின் உள்ளத்தைக்

கொள்ளைகொள்ளும் வகையிலமைந்த

இனியவன் அவர்களின்

புதுமை எழுத்துக்களை வெளியிட்டு மகிழ்ந்தன!

1959- இல் எழுதத் தொடங்கினார்!

1972-ஆம் ஆண்டில்

பதினான்கு ஆண்டுகளில்

இருநூற்றைம்பது சிறுகதைகள்

பதினேழு குறும் புதினங்கள்

பதினைந்து புதினங்கள்

பயணநூல்கள் இரண்டு

அடடே! இனியவன் அவர்களின்

இலக்கியப்பண்ணையில் அமோக விளைச்சல்!

பண்ணைப்புரட்சியாளர் முத்துமல்லா ரெட்டியார்

வியந்து பாராட்டிய இலக்கியக்களஞ்சியம்!

முப்பது வயதில்

இப்படிச் சாதித்தவர்கள்

எவரேனும் உளரா?

ஒப்பற்ற சாதனை!

எழுத்துக்களால் வரலாறு படைத்த இனியவன்

எழுத்தாளர்களுக்குப் பணியாற்ற முனைந்தார்!

வேடந்தாங்கலில் அவர் நடத்திய




இலக்கியவீதி & பாரதிய வித்யா பவன்

ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்

கருத்தில் வாழும் கவிஞர்கள்

வீதி 42 உலா 06

பாரதிய வித்யா பவன்

தொடர் நிகழ்ச்சி 14

'கவிக்கோ அப்துல் ரகுமான்'

தலைமை

முனைவர் தெ. ஞானசுந்தரம்

முன்னிலை

திரு இலக்கியவீதி இனியவன்

'அன்னம் விருது' பெறுபவர்

கவிஞர் ராசி அழகப்பன்

சிறப்புரை

கவிஞர் அறிவுமதி

தொகுப்புரை : திரு துரை. இலட்சுமிபதி

நிகழ்ச்சி ஒருங்கிணைப்பு : கவிஞர் மலர்மகன்

நாள் திருவள்ளுவர் ஆண்டு 2050 வெள்ளிக்கிழமை, பிப்ரவரி 22, 2019 நேரம் மாலை 06.30 மணி.

இடம் பாரதிய வித்யா பவன் சிற்றரங்கம், கிழக்கு மாடவீதி,

குழந்தைகள் எழுத்தாளர் கருத்தரங்கம்

அவர் வாழ்வில் ஒரு திருப்புமையம்!

புகழும் வருமானமும் வழங்கும்

புதினப்படைப்பைப் புறக்கணித்து

எழுத்தாளர் நலன்களை ஏந்திப் போற்றும்

புரவலராக விளங்குவதிலேயே

அவர் கருத்துச் செலுத்தினார்!




செங்கற்பட்டில் அழ. வள்ளியப்பாவும்

நாரண துரைக்கண்ணனும் நடத்திய

செங்கை எழுத்தாளர் மாநாடு

வரலாற்றுப் புகழ்பெற்றது.

மாவட்ட எழுத்தாளர்களின்

வரலாறும் படங்களும் கொண்ட

கண்காட்சியை அமைக்கும்

பொறுப்பேற்றார் இனியவன்.



கண்காட்சியைக் கண்ட அறிஞர் அண்ணா

இனியவன் அவர்களின் அருஞ்செயலைப் பாராட்டினார்!

எழுத்துப்பணியில் முத்திரை பதித்த இனியவன்

எழுத்தாளர்க்குப் பணியாற்ற முனைந்தார்.

இலக்கியவீதிபிறந்தது.

மதுராந்தகம் பகுதி மதுரையம்பதி ஆயிற்று.

தென்பாண்டித் தமிழ்ச்சங்கம்

வடக்கே இடம்பெயர்ந்தது.

மலர்மகன், தாரா பாரதி,

மாலவன், சித்ரா பார்த்தசாரதி,

சாந்தப்பிரியா, ஏ. வி. கிரி,

மது. ராசேந்திரன், வெங்கடேச ரவி,

எசு. குமார், எம். வி. குமார்,

குமார கிருட்டிணன், தங்க. சிவராசன் என

அன்பர்கள் திரண்டனர்.

பாவலர் அணியும் ஆர்வலர் அணியும்

இலக்கிய வீதியை அணிசெய்தனர்.

தீது நீக்கி நன்றின்பால் உய்க்கும்

திறனாய்வுக் கொள்கையை உணர்த்தும்வண்ணம்

அன்னம் அதன் சின்னமாயிற்று.

வீடு தோறும் கலையின் விளக்கம் என்னும்

குறிக்கோள் வாசகம் அவர்களின்

செயற்பாட்டுக்கு வழிவகுத்தது.

செல்வமும் செல்வாக்கும் மிக்க எழுத்தாளர்கள்

தந்தமாளிகையில் தங்கிவிடாமல்

வீதிக்குவந்து மக்களுடன்

கலந்துரையாற்ற வழிவகுத்தது இலக்கியவீதி.

நாரண துரைக்கண்ணன் தொடக்கிவைத்தார்.

அவ்வப்போது நிகழ்ந்த கூட்டங்களில்








பங்குபெற்ற படைப்பாளர்களின் பெயரைக் கூறினால்



நா. பா. சுஜாதா, ஜே. எம். சாலி, பொன்மணி வைரமுத்து,

லேனா தமிழ்வாணன், அப்துல் ரகுமான்,

மு. மேத்தா, பொன். செல்வகணபதி எனப்

பட்டியல் நீளும். சுருங்கச் சொன்னால்

தமிழ்நாட்டின் படைப்பாளர்கள் அனைவரும்

மகிழ்வுடன் இலக்கியவீதி நிகழ்வுகளுக்கு வந்து சென்றனர்.

சிலம்பொலி செல்லப்பனார், அவ்வை. நடராசன்,

ஆசிரியர் கி. வீரமணி, ஆனூர் செகதீசன்,



எனச் சான்றோர் பலரும் இதன் புரவலராயினர்.

இலக்கியநிகழ்வுகள் இங்கே ஒருவழிப்பாதையன்று

அவையில் உள்ளோர் எழுப்பும் வினாவுக்குப்

பொழிவாற்றியோர் விடையளிக்கவேண்டும்!

இதனால் இலக்கியவீதியை லேனா தமிழ்வாணன்

சங்கப்பலகைஎன அழைத்தார்.

இலக்கிய உலகின் எழுஞாயிறாக விளங்கிய



இலக்கியவீதியின் ஒளிக்கதிர்கள்

எட்டுத்திசைகளிலும் பரவி

இலக்கிய மறுமலர்ச்சியையும்

தமிழன்பர் உள்ளத்தில்

புத்துணர்ச்சியையும் ஏற்படுத்தியது.

மதுராந்தகத்தில் தொடங்கியது

மாவட்டமெங்கும் விரிந்து
மாநிலமெங்கும் பரந்து
தில்லி வரை சென்று
இலங்கை, சிங்கப்பூர், மலேசியா
என ஆட்சி செலுத்திய செய்தி
இலக்கிய அமைப்புகளின் வரலாற்றில்
பதிவு செய்யப்படவேண்டிய
கின்னசு சாதனை எனலாம்.
இலக்கியவீதிப் பாவலர் பரம்பரை
பாரதிதாசன் பரம்பரையின் விரிவாக நீண்டது.
பன்மீன் நடுவண் பால்மதி போன்று
இலக்கியவீதிப் பாவலர் நடுவே
பாரதியார்க்குப் பேரனாக, இளைய பாரதிதாசனாக
தாரா பாரதி வலம்வந்தார்.
பல்லவன், மலர்மகன், தளவாய் இளங்குமரன்
கவிமுகில் எனப் பல பாவலர்களை உருவாக்கினார்.
கபிலர்-பாரி
ஔவையார்-அதியமான்
பரணர்-பேகன்
பிசிராந்தையார்-கோப்பெருஞ்சோழன்
போலவே
தாரா பாரதி-இனியவன் நட்பு
காவியச்சிறப்பு வாய்ந்தது.
வெறுங்கை என்பது மூடத்தனம்-உன்
விரல்கள் பத்தும் மூலதனம்
எனும் தாராபாரதியின் முழக்கம்
இளைஞர் உலகு எழுச்சிபெறச் செய்தது.
கருத்துச்செறிவும் கொள்கைமிடுக்கும்
அங்கதக்கூர்மையும் படிமப்பாங்கும் கொண்ட
தாராபாரதி கவிதை தமிழுலகில்
தடம் பதிக்க வழிவகுத்தது
இலக்கியவீதியின் இன்னொரு சாதனை.
ஒரு கவிஞரின் கவிதைநூலுக்குச்






சிறப்பான விழா எடுத்து
அறிமுகம் செய்வதிலும்
அவ் விழாவிலேயே
அச்சிட்ட அத்தனைப் படிகளும்
விற்பனையாகிவிடுவதிலும்
சாதனை படைத்தது
இனியவனின் இலக்கியவீதியே.
இன்னொரு தமிழ்ச்சங்கமாய்
மற்றுமொரு தமிழ்ப்பல்கலைக்கழகமாய்
இலக்கியவீதி இயங்கிவரும் சிறப்பை
எப்படிச் சொல்வது?



கவனகக்கலையைத் தமிழ்நாட்டின்
கவனத்திற்குக் கொணர்ந்தார்.
பதின்கவனகக் கலைஞர் இராமையாவைப்
பாரறியச்செய்தார் இனியவன்.
நாட்டுப்புறக்கலைஞர்கள்
முத்துக்கூத்தன், கலைவாணன்
வில்லிசைவேந்தர் சுப்பு ஆறுமுகம்
தமிழிசை இளவரசு டி. கே. எசு. கலைவாணன்
எனப் பல கலையரசர்களும்
இலக்கியவீதியில் ஊர்வலம் வந்தனர்.
எம். எஸ். உதயமூர்த்தி, விசயலட்சுமி நவநீதகிருஷ்ணன்,
சாலமன் பாப்பையா, தென்கச்சி சுவாமிநாதன்,
மருத்துவர் மாத்ருபூதம், வார்த்தைச்சித்தர் வலம்புரி ஜான்,
சுப. விரபாண்டியன், இயக்குநர் சீமான் என்று



தமிழ்நாட்டின் சிந்தனையாளர்களும்
சமூக ஆர்வலர்களும் இலக்கியப்படைப்பாளர்களும்
இலக்கியவீதியின் நிகழ்ச்சிகளின் மூலம்
புதிய விவாதங்கள், கருத்துரைகள் வழங்கியதும்
இன்றளவும் இலக்கியவீதி புத்துணர்வுடன்
இதயத்தில் வாழும் எழுத்தளர்களைப் பற்றிய
ஆய்வரங்கங்களை நடத்திவருவதும்
செம்மொழியாய்ச் செந்தமிழைச்

செழிக்கச்செய்யும் கலைகளை விளக்குதற்கு
வித்தகர்களின் துணையுடன்
கருத்தரங்குகள் அமைத்துவருவதும்
இனியவன் அவர்களுக்கு மட்டுமன்றி
இனியநம் தமிழுக்கே பெருமை நல்குவதாகும்.
எழுபத்தைந்து வயதிலும்
இருபத்தைந்தின் செயல்துடிப்பு
வித்தகக் கவிஞர்களையும்
வியத்தகு அறிஞர்களையும்
முத்திரை எழுத்தாளர்களையும்
போற்றிக் கொண்டாடுவதில்
இனியவனுக்கு நிகர் இனியவனே.
ஒன்பதாம் வகுப்பு படிக்கும்போது
முதல் பரிசுபெற்ற சிறுகதையாசிரியர்
பன்னிரண்டாம் வகுப்பு மாணவப்பருவத்தில்
பதினைந்து விழுக்காடு உரிமத்தொகை பெற்ற
புதினப்படைப்பாளர்
முப்பது வயதில்
இருநூற்றைம்பது சிறுகதைகள்
பதினேழு குறும் புதினங்கள்
பதினைந்து புதினங்கள்
பயணநூல்கள் இரண்டு
முப்பத்தைந்து வயதில் இலக்கியவீதி
இன்று
எழுபத்தைந்து வயதில்
தமிழ் இலக்கிய உலகமே இவர்தம் சுற்றம்.
ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர் (குறள்-228.)
என்பது வள்ளுவர் வாய்மொழி.
தயையும் கொடையும் பிறவிக்குணம்
என்பது அவ்வையார் வழங்கிய அருள்மொழி.
கொடுத்து மகிழ்வதும்
பிறரைப் பாராட்டிச் சீராட்டி இன்புறுவதும்





வள்ளல்களுக்கு வாய்த்த பண்புகள்.
அத்தகைய பண்புக்கு ஓர் உறைவிடம் இனியவன் அவர்கள்.
சென்னைக் கம்பன் கழகச் செயலாளராகத்
தொண்டாற்றுமாறு
அருளாளர் இராம. வீரப்பன்
அன்பாய் அழைத்தார்.
இராம வீரப்பனுக்கு
இலக்குவர் இனியவன்
நட்புக்கும் அன்புக்கும்
இணையற்ற சான்று.
இவர்களின் இணைப்பால்
கம்பன் கழகம்
கம்பனுக்கு ஒரு
பல்கலைக்கழகமாய் விளங்குகிறது.
விளம்பரம் பெற்றவர்களையே
திரும்பத்திரும்ப
முன்னிறுத்தாமல்
இலைமறைகனிகளை
இனங்கண்டு பாராட்டும் பண்பு
இவ்விருவரின் தனி அடையாளம்.
பதவி மிடுக்கும்
விளம்பரவெளிச்சமும்
மறைமலை இலக்குவனார்
ஊடகச்செல்வாக்கும்
இவர்களை மயங்கச்செய்வதில்லை.
புலமையைப் போற்றுவதும்
திறமையைக் கொண்டாடுவதும்
குடத்து விளக்குகளைக்
குன்றிலேற்றுவதும்
இராம வீரப்பனார்க்கும்
இலக்குவ இனியவனார்க்கும்
ஊனோடும் உதிரத்தோடும்
ஊறிய பழக்கம்.





சாதிப்பிணக்கும் சமயப்பூசலும்
கட்சிப்பிளவும் இல்லாத
ஒருமைப்பண்பு மிக்க
உயரிய அமைப்பாகச்
சென்னைக் கம்பன் கழகம்
தனித்திலங்கி மிளிர்கிறது.
இலக்க்கியவீதியும்
கம்பன் கழகமும்
இனியவனின்
செயலகங்கள்.
தமிழுக்கு விழா
தமிழறிஞர்க்கு விழா
தமிழ்ச்சுவை பரப்பும் விழா
என விழாக்கள்
திட்டமிட்டு
நடத்தித்
தமிழுலகு பயனுறச் செய்வதே
இனியவன் அவர்களின்
கொள்கை, குறிக்கோள்,
செயற்பாடு,
உயிர்மூச்சு.
தமிழால் இனியவன் சிறப்புறுவதும்
இனியவனால் தமிழ் சிறப்புறுவதும்
சொல்லச்சொல்ல இனிக்கும்
சொல்லில் அடங்காமல் விரியும்.
வாழிய இனியவன் வளம் பல பெற்றே
சூழ்க நலனே சுடர்க புகழே!

இலக்கியவீதி & பாரதிய வித்யா பவன்

ஸ்ரீ கிருஷ்ண ஸ்வீட்ஸ்
கருத்தில் வாழும் கவிஞர்கள்
தொடர் நிகழ்ச்சி 14

வீதி 42 உலா 06

பாரதிய வித்யா பவன்

'கவிக்கோ அப்துல் ரகுமான்'

தலைமை
முனைவர் தெ. ஞானசுந்தரம்

முன்னிலை
திரு இலக்கியவீதி இனியவன்

'அன்னம் விருது' பெறுபவர்
கவிஞர் ராசி அழகப்பன்

சிறப்புரை
கவிஞர் அறிவுமதி

கருத்துரை : திரு துரை. இலட்சுமிபதி
நிகழ்ச்சி ஒருங்கிணைப்பு : கவிஞர் மலர்மகன்

நாள் திருவள்ளுவர் ஆண்டு 2050 வெள்ளிக்கிழமை, பிப்ரவரி 22, 2019
நேரம் மாலை 06.30 மணி.
இடம் பாரதிய வித்யா பவன் சிற்றரங்கம், கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-600 004.

உறவும் நட்புமாக வருகை தர வேண்டுகிறோம்...

அடுத்த மாத நிகழ்வு : மார்ச் 22, 2019 வெள்ளிக்கிழமை, மாலை 06.30 மணி

www.srikrishnasweets.com
View Our Programmes on YouTube **chennaisrikrishnasweets**









குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்













ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!

நன்கொடை வேண்டாம்!

படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!

anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு
உங்கள் மின்னஞ்சல் முகவரி அல்லது
புலன எண் தெரிவித்தால் போதும்!

